தமிழ்ப் புலவர் வரிசை

ஸ்ரீ

# குமரகுருபர சுவாமிகள்

மு. அருணாசலம்

காந்தி வித்தியாலயம்
திருச்சிற்றம்பலம்

தோத்திரம் என்ற பெயரோடு கட்டளைக் கலித்துறையால் செய்யப்பட்ட 30 பாடல் கொண்ட ஒரு தனிநூல் உண்டு. இது கம்பர் செய்ததென்று வழங்குவது; ஆனால் இராமாயணம் பாடிய கம்பர் செய்ததன்று, எனினும் இதுவும் ஒரு பழமையான நூலாகவே இருக்கலாம் என்றும் அறிஞர் கருதுவர்.

அனுபந்தம் : 10

## கயிலைக் கலம்பகம்

சுவாமிகளுடைய நூல்களைக் கூறிய இடத்தில் இரண்டாவது கயிலைக் கலம்பகம் என்றும், இந்நூல் இப்போது கிடைக்கவில்லை என்றும், கிடைக்கின்ற எட்டுப் பாடல்களும் இந்நூலைச் சேர்ந்தன அல்ல என்றும் சொல்லப் பட்டது. கீழே அவ்வெட்டுப் பாடல்களை வேறு சில குறிப்புக்களோடு தருகிறோம்.

இக்கயிலை என்பது சுவாமிகள் பிறந்த ஸ்ரீவைகுண்டத்தின் பாகமாகிய கயிலாசபுரம். அங்கு ஒரு பெரிய சிவாலயம். கற்கோயிலாக உள்ளது. சுவாமி கயிலாச நாதர். அம்பிகை சிவகாம சுந்தரி. அங்கு 1987 ஏப்ரல் மாதம் ஊரார் ஒரு லட்சார்ச்சனை நடத்தினார்கள். அச்சமயம் இப்பாடல்களை வெளியிட்டார்கள். அக்கோயில் தாமிரபரணி நதிக் கரையில் அமைந்துள்ள நவ (ஒன்பது) கயிலாசங்களில் ஒன்று. சுவாமி சுயம்பு என்பது ஐதிகம்.

1. கங்கைச் சடையும் கயிலைப் பிரான் இமய
மங்கைக் கமுதாம் வடிவழகும் - அங்கத்
திருத்தோடும் கண்டுளத்தில் சிந்தித்தால் கால
மிருத்தோடும் ஓடும் வினை.

2. தேமாம் பொழிலுடுத்த தென்வைகுந்தைக் கயிலைக்
கோமானை முக்கட் கொழுமணியைக் காமருபூந்
தாமச் சடையானைத் தான்தொழுதால் புன்புழுக்கூடு
ஆமச் சடையான் அயன்.

3. தன்னந் தனியே நின்றுமதித்
தழல்நின் றெறியச் சமைந்திடுமென்
அன்னஞ் சுவையார் அமுதென நஞ்
சமுதாக் கியதாம் அறிவாரோ
பொன்னம் பலமும் வெள்ளிமன்றும்
பொதுவென் றுரிமைத் திருத்தொண்டர்
நன்னெஞ் சகத்தும் நாடகம் செய்
நடத்தார் கயிலை இடத்தாரே.

[வண்டு]

4. கூற்றிருக்கும் கொலைமழுவும் கொடியிருக்கும்
இடமருங்கும் கொண்டு தண்தேன்
ஊற்றிருக்கும் பொற்கயிலை வீற்றிருக்கும்
பெருமானார்க்கு உரையீர் அந்தோ
மாற்றிருக்கும் பசும் பொன்முலை உயிரிருக்கும்
இடம் தேடி வருந்தித் தென்றல்
காற்றிருக்கும் தமிழ்நாட்டில் குடியிருக்க
முடியாது களிவண் டீரே.

5. [கழிக்கரைப் புலம்பல்]

கழியே கழிக்கரையே கண்டலே தென்திரைக் கடலே
சுழியே சுழிபடு தண்டுறையே யொண்துறைத் தமிழின
மொழியேர் வைகுந்தைக் கயிலேசர் வெற்பின் முழுவதும் பெண்
பழியே கொளக்கடவார் ஒரு கூற்றம் பகருமினே.

6. நங்கள் புன்கண் அறுத்துளக் கண்
அளிக்க வைத்த அருட்கணார்
நடன குஞ்சித பதமெடுத்தொரு
நாத கீத முழங்கிடக்

கங்கை பொங்கான் மங்கையொடு நடம்
ஆடுவார் மதிசூடுவார்
காயிலைநாதர் வைகுந்தை வாணர்
கடுக்கை மாலை கொடுக்கிலார்

அங்கண் மாலையின் மதியமல்ல
அசைந்த தென்றலும் அல்லவெற்கு
ஆகுலம் புரி கோகிலங்களல
அரசுவா வென உருவிலான்
மங்குல் அறவிடு கங்குல் அளவிள
வாடையலவவர் கொம்பனார்
வம்புமல மலரம்புமலவளை
மாற்றமே கொடுங் கூற்றமே.

[அம்மானை]

7. பூணுதற்கு வைத்ததுத்திப் பூணர்கயிலேசர்ஒரு
வாணுதற்கு மாலானார் வைகுந்தத் தம்மானை
வாணுதற்கு மாலானார் வைகுந்தத் தாமாகில்
காணுதற்குக் கார்மேனி காட்டாரோ அம்மானை
கண்டமட்டில் மெத்தக் கறுத்திருப்பார் அம்மானை.

[அம்மானை]

8. கைம்மான் மறியேந்தும் கண்ணுதலார் தென்கயிலைப்
பெம்மான் ஒருபாதிப் பெண்ணர்கான் அம்மானை
பெம்மான் ஒருபாதிப் பெண்ணரே யாமாகில்
அம்மான் அருந்தனம் உண்டாகாதோ அம்மானை
ஐயம் புகுவார்க்கு அருந்தனமே தம்மானை.